மூ;—சுரிந்திட்டசெங்கே ழுளைப்பொங்கரிமாத்
துலையப்பிரியாது சென்றெய்தியெய்தா
திரிந்திட் டிடங்கொண்டடங்கா ததன்வா
யிருகூறுசெய்த பெருமான்முனநாள்
வரிந்திட்டவில்லால் மரமேழுமெய்து
மலைபோலுருவத் தொரிராக்கதிமூக்கு
அரிந்திட்டவன்காண்மி னின்றுய்ச்சியரால்
அளைவெண்ணெயுண் டாப்புண்டிருந்தவனே.

| பதம். | உரை. |
|---|---|
| சுரிந்திட்ட | சுருண்டிரா நிற்பனவாய் |
| செம் கேழ் | சிவந்தநிறத்தை யுடையனவான |
| உளை | பிடரி மயிர்களையுடைத்தாய்க்கொண்டு |
| பொங்கு | களித்து வாராநின்றுள்ள |
| அரி | சாத்ரவம் பொருந்திய |
| மா | குதிரைவடிவம் கொண்டகேசியானவன் |
| துலைய | முடிந்துபோம்படியாக |
| பிரியாது | (அத்தை) விடாமே |
| சென்று எய்தி | சென்று கிட்டி, |
| எய்தா | ஒருகாலும்வந்து கிட்டாததாய் |
| திரிந்திட்டு | அங்குமிங்கும் திரிந்து |
| இடங்கொண் | அவகாசம் கொடாதே |
| டடங்காது | அப(்ரு)வ்யமாய்க்கிடந்த |

| பதம். | உரை. |
|---|---|
| அதன் | அந்தக் கேசியினுடைய |
| வாய் | வாயை |
| இருகூறுசெய்த | இருபிளவாம்படி பண்ணின |
| பெருமான் | ஸ்வாமியாய், |
| முனநாள் | ராமாவதாரத்திலே |
| வரிந்திட்ட | கட்டுடைத்தான |
| வில்லால் | வில்லாலே |
| மரம் ஏழும் | மராமரங்களேழையும் |
| எய்து | முறித்து, |
| மலைபோல் | மலைபோன்ற |
| உருவம் | வடிவையுடையளான |
| ஒரு இராக்கதி | சூர்ப்பணகை யென்பாளொரு ராக்ஷஸியி[ன் |
| மூக்கு | மூக்கை |
| அரிந்திட்டவன்காண்மின் | அறுத்தெறிந்தவன் இவர்! |

இன்று இத்யாதி பூர்வவத். (கூ)

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (சுரிந்திட்டவித்யாதி) சுருண்டு சிவந்த நிறத்தையுடைத்தாய், "கேழ்" என்று-நிறம். உளைமயிரை

---

லா நின்றுகொண்டு, கட்டுண்ட க்ருஷ்ணனுடைய வீர்யந்தானும் அத்புதமா பிருக்கையாலே கேசிநிரஸநத்தையும் அநுஸந்தித்து வித்த(்ரு)ராகிறரென்று ஸங்கதி.

யுடைத்தாய்க்கொண்டு களித்துவருகிற கேசிமுடியும்படியாக அ
தைவிடாதே சென்றுகிட்டி. (எய்தாதித்யாதி) ஒருகாலும்வந்
கிட்டாதே அங்கேயிங்கேதிரிந்து. (இடங்கொண்டடங்காது) அ
காசம்கொடாதே அபவ்யமாய்த்திரிகிற அதினுடையவாயை இ
பிளவாம்படிபண்ணின ஸர்வேஶ்வரன். (வந்தித்யாதி) கட்டுடை
தானவில்லாலே மஹாராஜரை விஶ்வஸிப்பிக்கைக்காகமராமரங்களே
ழையுமெய்து, மலைபோலேயிருக்கிற வடிவையுடையளாயிருக்க
செய்தேயும், பிராட்டிபோலே தன்னை ஸமானையாக புத்திபண்ண
வந்த சூர்பணகிக்கு வைரூப்யத்தைப்பண்ணி விட்டவன்கிடீர். ப்ர
கூலையாய் வருகையாலேயிறே வைரூப்யத்தை விளைத்துவிட்ட
அநுகூலைக்கு அகப்படாமை யில்லையிறே. .... .... .... (௯

மூ;—நின்றார்முகப்புச் சிறிதும்நினையான்
வயிற்றைநிறைப்பா னுறிப்பால்தயிர்நெய்
அன்றாய்ச்சியர்வெண்ணெய் விழுங்கியுரலோ
டாப்புண்டிருந்த பெருமானடிமேல்
நன்றாயதொல்சீர் வயல்மங்கையர்கோன்
கலியனொலிசெய் தமிழ்மாலைவல்லார்
என்றுமெய்தா ரிடரின்பமெய்தி
யிமையோர்க்குமப்பால் செலவெய்துவாரே. (௧

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

---

| பதம். | உரை. |
|---|---|
| நின்றார் | (வெண்ணெய் களவு செய்து கட்டுண்டிருந்த வாஶ்சர்யத்தைப்பார்க்கவந்து) நின்றவர்களுடைய |
| முகப்பு | முன்பே |
| சிறிதும் | ஏகதேசமும் |
| நினையான் | லஜ்ஜிக்கமாட்டாதவ [னாய், |
| வயிற்றை | வயிற்றை |
| நிறைப்பான் | நிறைக்கையொன்றிலுமே ஒருப்பட்டவ |
| ஆய்ச்சியர் | இடைச்சிகள் [னாய் |

| பதம். | உரை. |
|---|---|
| உறி | உறிகளிலே சேமித் |
| பால் | பாலையும் [வைத் |
| தயிர் | தயிரையும் |
| நெய் | நெய்யையும் |
| வெண்ணெய் | வெண்ணெயையும் |
| விழுங்கி | (களவுகண்டு) அமு |
| அன்று | அப்போது [செய்த |
| உரலோடு | உரலோடே |
| ஆப்புண்டிருந்த | கட்டுண்டிருந்த |
| பெருமான் | கண்ணபிரானுடைய |
| அடிமேல் | திருவடிகளின் மேலே |

---

"அரிமா"-சத்ருவான குதிரையாயருளுகிறார் (கேசி) என்று. ... (௯

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ..ன்றாய | விலக்ஷணமாய் | என்றுனும் | ஒருகாலும் |
| ..தால் | நிரவதிகமான | இடர் | துன்பத்தை |
| ..ர் | ஸம்பத்தை யுடைய | எய்தார் | அடையமாட்டார்கள்; |
| ..யல் | வயல்சூழ்ந்த [ராய் | இன்பம் | நிரதிசயாநந்தத்தை |
| ..ங்கையர் | திருமங்கையி லுள்ளார் | எய்தி | அடைந்து |
| ..கோன் | நிர்வாஹகரான [க்கு | இமையோர்க்கும் | ப்ரஹ்மாதிகள் குடியிருப்புக்கும் |
| ..லியன் | ஆழ்வார் | அப்பால் | அவ்வருகான பரமபதத்தை |
| ..லிசெய் | அருளிச்செய்த | செலஎய்துவார் | ப்ராபிக்கப்பெறுவர்கள். (௧௦) |
| ..மிழ் | த்ராவிட பாஷா ரூப | | |
| ..லை | சொல்மாலையை [மான | | |
| ..ல்லார் | ஓதவல்லவர்கள் | | |

வ்யா;—பத்தாம்பாட்டு. (நின்றாரித்யாதி) களவோடேகண்டு ..டித்துக்கட்டினவாறே பலரும் பார்க்கவருவர்களே; அவர்கள் ..கத்தைப் பார்த்து லஜ்ஜிக்குமது ஏகதேசமுமில்லை (வயிற் ..ற நிறைப்பான்) இதொன்றையுமாயிற்று எப்போதும் நினைத்திரு ..பது. உறிகளிலே இடைச்சிகள் சேமித்துவைத்த பால்தயிர்நெய் ..வெண்ணெய் இவற்றை அமுதுசெய்து, அவர்கள் உரலோடே சேர் ..துக்கட்டக் கட்டுண்டவன்மேலே சொல்லிற்று. (என்றுனுமித் ..ாதி) ஒருகாலும் துக்கத்தை ப்ராபியார்கள். நிரதிசயாநந்தத்தை ..ராபித்து ப்ரஹ்மாதிகள் குடியிருப்புக்குமவ்வருகான பரமபதத் ..தைப்ராபிப்பர். .... .... .... .... .... .... (௧௦)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

---

## பெரியதிருமொழி

## பத்தாம்பத்து ஆறுந்திருமொழி முற்றிற்று.

---

..அரு;—பத்தாம்பாட்டு. (நின்றாரித்யாதி) "சிறிதும் நினையானுமாய், வயிற் ..ற நிறைப்பானுமாய், ஆப்புண்டிருந்த" என்றந்வயம். ... ... (௧௦)

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

# பத்தாம்பத்து ஏழாந்திருமொழி
## மானம் ப்ரவேசம்.

வ்யா;—வெண்ணெய் களவுகாணும் பருவத்தைத்தப்பி, வெண்ணெயும் பெண்களையுமொக்கக்களவுகாணும் பருவமாயிருக்கிறபடியை அநுஸந்தித்து, யசோதைப்பிராட்டியானவள் விளைவதறியாமையாலே "இது எவ்வளவாய்ப்புகுகிறதோ?" என்று அஞ்சியிருக்க, இவனாலே நோவுபட்டு ஊரிலுள்ளாரடங்கலும் "அதுபோயிற்று, இதுபோயிற்று" என்று இங்ஙனே முறைப்பட, அவளும், அவர்களுமாகப் பரிமாறின அப்பெரிய குழாங்களைத்தாமநுபவிக்கிறார்.

அவ;—ஒருத்தியைப்பார்த்து வார்த்தைசொல்லுகிறார். .... *

மூ;—

மானமுடைத்துங்களாயர்குல மதனால்பிறர்மக்கள்தம்மை
ஊனமுடையனசெய்யப்பெறாயென் றிரப்பனுரப்பகில்லேன் [கேள்
நானுமுரைத்திலேன் நந்தன்பணித்திலன் நங்கைகாள்நானென்செய்
தானுமோர்கன்னியும் கீழையகத்துத் தயிர்கடைகின்றான்போலும்.

அ௩;—மானத்தின்ப்ரவேசம். கீழ்த்திருமொழியிலே யசோதைப் பிராட்டி பா(ஞா)வனையிருக்கச் செய்தே, அவள் பிறர் வாயாலே சொல்லுமாபோலே திருமங்கையாழ்வார் ஈடுபட்டாராகப்பேசி வித்தாராயிருந்தார்; அவள் தானும்-இவன் பருவம் அல்பம் முற்றின வளவிலே பெண்களைக் களவுகாணக் கண்டு வித்தை(ஷ்டீ)யாயிருக்க, அவ்வூரிலெல்லாரும் முறைப்பட்ட வளவிலே அத்தை அநுஸந்தித்து அத்தனைபேருடைய தசையையுமுடையராய், அநுபவிக்கிறாரென்று ஸங்கதி யருளுகிறார் (வெண்ணெயித்யாதி). *

அ௩;—முதற்பாட்டு. (மானமித்யாதி) "நங்கைகாள்" என்று-பஹுவசநமாகப் பாட்டிலே யிருந்தாலும், பிள்ளையின் தூ (ர்த்த)ர்த்த சேஷ்டிதத்தைப் பலர் கேட்கச் சொல்லுமது சேராமையாலே அந்தரங்கையானவொருத்தியை உபசரித்து பூஜ்யதைதோற்றச்சொல்லுகிறாளென்றருளுகிறார் (ஒருத்தியை யித்யாதி).

| பதம். | உரை. |
|---|---|
| உங்கள் | "உங்களுடைய |
| ஆயர்குலம் | இடைக்குலமானது |
| மானம்உடைத்து அதனால் | மானத்தையுடையதாகையால் |
| பிறர் | அயலாருடைய |
| மக்கள் தம்மை | பெண்கள்பக்கலிலே |
| ஊனமுடையன | இழிதொழில்களை |
| செய்யப்பெறாய் என்று | செய்யாதொழியவேணும்" என்று |
| இரப்பன் | (காலைப்பிடித்து) ப்ரார்த்திப்பேன்; (அத்தனைபோக்கி) |
| உரப்பகில்லேன் | பொடிந்துவார்த்தை சொல்ல சக்தையாகிறிலேன்; |
| நானும் | (தாயான) நானும் |
| உரைத்திலேன் | (ஒன்று) சொல்லப்பெற்றிலேன்; |

| பதம். | உரை. |
|---|---|
| நந்தன் | (தமப்பனாரான) ஸ்ரீநந்தகோபரும் |
| பணித்திலன் | (ஒன்று) அருளிச்செய்யப் பெற்றிலர்; |
| நங்கைகாள் | ப([illegible])வ்யரான பிள்ளைகளைப்பெற்று வளர்க்கும் பூர்த்தியையுடைய பெண்காள்! |
| நான்என்செய்கேன் | நான்செய்யக்கடவதென்?; |
| | (இக்கண்ணபிரானானவன்,) |
| தானும் | தானும் |
| ஓர்கன்னியும் | ஒருகன்னியுமாய்க்கொண்டு |
| கீழைஅகத்து | கீழண்டைவீட்டில் |
| தயிர் | தயிரை |
| கடைகின்றான்போலும் | கடைந்துகொண்டிராநின்றான் போலும். |

வ்யா;—முதற்பாட்டு. (மானமித்யாதி) எங்கேனுமோரிடத்திலே "சுருசுரு" என்னக்கேட்டால் பின்னைக்கொண்டு ஜீவியார்கள் மானத்தாலே; ஆகையால் பிறருடையபெண்களை ஸம்போகசிந்ஹங்களை விளைத்துவிடப்பெறாயென்று இங்ஙனே இரப்பன். (உரப்பகில்லேன்) பொடியில் தீம்பிலே இரட்டிக்குமே; காலைப்பிடித்துஇரப்பன்;. பொடிகிறிலேன்; நான் சொல்விற்றைச்செய்தல், தமப்பனார் சொல்விற்றைச்செய்தல் செய்யாதபருவமிறே உன்பருவம். நானும்

"உங்களாயர் குலம் - மானமுடைத்தாகையாலே - பிறர்மக்கள் தம்மை ஊன முடையன செய்யப்பெறாய்" என்றந்வயம் திருவுள்ளம் பற்றித்தாத்பர்யமருளுகிறார். (எங்கேனுமித்யாதி). (சுருசுரு) ஏகாந்தமாகஅபவாதம் சொல்லுகை. உரப்புதல் இரட்டிக்கைக்கு ஹேதுவாமோவென்ன ; அவன் பருவம் அப்படிப்பட்டதென்று மேல்க்குத் தாத்பர்யம் (நானித்யாதி).

சொல்லிற்றிலேன்; தமப்பனாரும் அருளிச்செய்திலர்; (நங்கைகாள்) நீங்களுமெல்லாம் பிள்ளைபெற்றுவளர்க்கிறிகோளே, நான் இனிச் செய்வதென்? (தானுமித்யாதி) ஸம்சேகமாத்ரமேயன்றிக்கே காரக முமுண்டாயிருந்தது. .... .... .... .... .... (க)

மூ;—

காலையெழுந்துகடைந்தவிம்மோர்விற்கப் போகின்றேன்கண்டேபோ மாலைநறுங்குஞ்சி நந்தன்மகனல்லால் மற்றுவந்தாருமில்லை [னேன் மேலையகத்துநங்காய் வந்துகாண்மின்கள் வெண்ணெயேயன்றிருந்த பாலும்பதின்குடம் கண்டிலேன் பாவியேனென்செய்கேனென்செய்கேனே.

| பதம். | உரை. |
|---|---|
| காலைஎழுந்து | ப்ராதக்காலத்திலெழுந்து |
| கடைந்த | கடைந்த |
| இம்மோர் | இந்தமோரை |
| விற்க | விற்பதற்காக |
| போகின்றேன் | (தெருவேறப்) போகாநின்ற நான், (எனக்கெதிராகவந்த கண்ணபிரானை) |
| கண்டே | பார்த்தே |
| போனேன் | (இனி எவ்வளவாய் விளையுமோ வென்றஞ்சிப்)போனேன்; |
| மாலை | பூமாலையாலே |
| நறு | பரிமளியாநின்றுள்ள |
| குஞ்சி | மயிர்முடியையுடையனாய் |
| நந்தன் | ஸ்ரீநந்தகோபருடைய |
| மகன்அல்லால் | குமாரனான கண்ணனொருவனொழிய |
| மற்று | மற்றொருவரும் |
| வந்தாரும்இல்லை | (என்அகத்தில்) வந்ததில்லை ; |
| மேலைஅகத்து | மேலண்டையகத்திலுள்ள |
| நங்காய் | யசோதைப்பிராட்டீ! |
| வந்து | (என் அகமேற) வந்து |
| காண்மின்கள் | (கண்ணன்செய்ததைப்)பார்க்கக்கடவை; |
| வெண்ணெயே அன்று | (கடைந்துவைத்த) வெண்ணெயையேயன்றிக்கே |
| பதின்குடம் | பத்துக்குடங்களிலே |
| இருந்த | (கடைகைக்காக) சேமித்துவைத்திருந்த |
| பாலும் | பாலையும் |
| கண்டிலேன் | காண்கிறிலேன்; |
| பாவியேன் | மஹா பாபத்தைப்பண்ணின நான் |
| என்செய்கேன் என்செய்கேன். | என்ன செய்யக் கடவேன்? |

சருசருகேட்டு நீ "இங்ஙனே என் செய்கேன்" என்கிறதென்னென்ன வருளுகிறார் (ஸம்சகேத்யாதி). (காரகம்)காரணம். பெண்ணும் பிள்ளையுமாயிருந்து தயிர்கடைந்தபடி கண்டால், இனி ஸம்ஶ்லேஷத்துக்கு ஸம்ஶய முண்டோ வென்று கருத்து. ... ... ... ... ... ... (க)

வ்யா:—இரண்டாம்பாட்டு. (காலையெழுந்து) ப்ராஹ்மே முஹூர்த்தத்திலே எழுந்திருந்து ஹிதசிந்தைபண்ணுவாரைப்போலே. (கடைந்த) இவையடையப் பாழிலே போக்கவொண்ணுதே, போகாநிற்கச்செய்தே நடுவழியிலேகண்டு "இது எவ்வளவாய் விளையக்கடவதோ?" என்று அஞ்சிப்போனேன்; (மாலையித்யாதி) ரக்ஷகத்வத்துக்குத் தனிமாலையிட்டிருக்கிறவனை யொழிய; செய்ததுக்கு நிவாரகரில்லாதவனையொழிய இதுசெய்யக்கடவாரில்லை; (மேலையகத்துநங்காய்) வந்தார்க்கு அறிவிக்குமது தவிர்ந்து அழைத்துக்காட்ட வேண்டுமளவாய்வந்து விழுந்தது. கடைந்து சேமித்துவைத்த வெண்ணெயேயன்றிக்கே கடைகைக்கு யோக்யமான பாலுங்கூடக் கண்டிலேன். (பாவியேனித்யாதி) கோத(ன)நராகையாலே உபஜீவ்யம் கவ்யமாயிருக்குமிறே. அத்தை இழந்தால் பின்னைப்பொறுக்க மாட்டார்களிறே. .... .... .... .... .... .... (௨)

மூ;—

தெள்ளியவாசிறியான் நங்கைகாளுறிமேலத்தடாநிறைந்த
வெள்ளிமலையிருந்தாலொத்த வெண்ணெயைவாரிவிழுங்கியிட்டு
கள்வனுறங்குகின்றான் வந்துகாண்மின்கள் கையெல்லாம்நெய்வயிறு
பிள்ளைபரமன்றிவ்வேழுலகும் கொள்ளும்பேதையேனென்செய்கேனோ

---

அரு;—இரண்டாம்பாட்டு. (காலையித்யாதி) ஆனைச்சாத்தன் எழுந்திருக்கும்காலத்திலே*வாசநறுங்குழலாய்ச்சியொருத்தி-தயிர்கடைய, அவளோடே தயிர்கடைந்து புறப்பட்டபடியைக்கண்டு, தாயானவள் அந்தரங்கையான ஒருத்தியோடே சொல்லி விசாரப்பட்டுக் கொண்டிருக்க, அநந்தரம் கடைந்த மோரை விற்கவேணுமென்று கீழையகத்து குடும்பிநியானவள் புறப்பட்டுப் போய் வந்து வெண்ணெயும் பாலுமிழந்த க்லேசாதிசயத்தாலே மேலையகத்து நங்கையானயசோதையோடே முறைப்பட, அந்த தசையையுடையராய்த்தாமநுபவிக்கிறாரென்று ஸங்கதி.

(ஒண்ணுதே) என்றவநந்தரம் "என்று" என்று சேஷம். "அழைத்துக்காட்ட" என்றதுக்கு-மேலையகத்து நங்கையான யசோதையைத்தானே அழைக்குமளவாய், அத்தனை க்லேசமென்று கருத்து. "பதின் குடமிருந்தபாலும்" என்றந்வயம் திருவுள்ளம்பற்றித் தாத்பர்யம் (கடைந்தவித்யாதி). (௨)

அரு;—மூன்றும்பாட்டு. (தெள்ளியவித்யாதி) கீழ்ப்பாட்டிலே கீழையகத்துநங்கை யசோதையோடே முறைப்பட்டிருக்க, அங்கே பெருங்கூட்டமாக

| பதம். | உரை. |
|---|---|
| | நங்கைகாள் !—; |
| தெள்ளிய | ( அமுதவூறலினாலே ) தெளிந்திராநின்றுள்ள |
| வாய் | திருப்பவளத்தையுடையனான |
| சிறியான் | இச்சிறுப் பிள்ளையானவன், |
| உறிமேல | உறியின்மேல் வைக்கப்பட்ட |
| தடா | மிடாவிலே |
| நிறைந்த | நிறைக்கப்பட்டும் |
| வெள்ளிமலை | வெள்ளிமலையானது |
| இருந்தாலொத்த | இருந்தாற்போலிராநின்றுள்ளதுமான |
| வெண்ணெயை | வெண்ணெயை |
| வாரி | (தன் தடங்கையால்) வாரி |
| விழுங்கியிட்டு | விழுங்கிவிட்டு |
| கள்வன் | கள்ளத்தனத்தைக் காட்டாநின்றவனாய் |

| பதம். | உரை. |
|---|---|
| உறங்குகின்றான் | உறங்காநின்றான்; |
| | வந்து காண்மின்கள்;— ( செய்த களவை மறைக்கவொண்ணாதபடி. ) |
| கை எல்லாம் | கைத்தலங்களடங்கலும் |
| நெய் | நெய்யாயிராநின்றன ; |
| வயிறு | (இவனுடைய) வயிறானது |
| பிள்ளைபரமன்று | பிள்ளைப் பருவத்துக்குரிய திறமுடைத்தாயிருந்ததில்லை ; |
| இவ்வேழுலகும் | இந்த ஸப்த லோகங்களையும் |
| கொள்ளும் | உள்ளேயடங்கக்கொள்ளும்; |
| பேதையேன் | அறிவிலியான நான் |
| என்செய்கேன் | என்ன செய்யக் கடவேன். (௩) |

வ்யா;—மூன்றாம்பாட்டு. (தெள்ளியவாய்ச் சிறியான்) கண்ணுக்கு இருக்கிறபடியும் செயலிருக்கிறபடியும்காண். ( நங்கைகாளித்யாதி ) மேலே தடாத்தன்னிலே வெள்ளிமலைபோலே சேமித்துவைத்த வெண்ணெயை வாரி அமுதுசெய்து "இவனை எங்ஙனே இதுசொல்லும்படி" என்னும்படியாகத்தான் அறியாதாரைப்போலே கிடந்து உறங்காநின்றான். நீங்களெல்லாம் இத்தை வந்துபாருங்கோள். இவன் மறைக்கப்பார்த்தாலும் ப்ரயோஜநமில்லை, கையெல்லாம் நெய்யாயிருக்க; (பிள்ளைபரமன்று) இவன் பருவத்தளவல்ல வயிற்றின்பெருமை. வெண்ணெயேயன்றிக்கே இவ்வேழுலகும் கொள்

---

விருப்பாரை யெல்லாரையும் பார்த்து யசோதைதான் அவன் செய்தவதுக்கு முறைப்பட்டபடியைத்தானநுபவிக்கிறாளென்று ஸங்கதி.

"தெள்ளியவாயில் அமுதவூறல் தெளிவுறலுடைய சிறியான்" என்று சப்தார்த்தமாய், "வந்து காண்மின்கள்" என்னுமளவுக்கும் கருத்தருளுகிறார் (கண்ணுக்கித்யாதி). கேட்ட பெருங்கூட்டத்திலே நீயும் எங்களைப்போலே

ம். "இத்தயிரும்பாலும் பாழ்போகாமே ஒருபிள்ளைவேணுமென்
ன்றோ நீபெற்றது. அவன் இப்போது அமுதுசெய்தானாகில் நீ
ப்படிபடுகிறதென்" என்ன; (பேதையேனென் செய்கேனே) "அவ
க்கு இது ஸாத்மியா தொழியில் செய்வதென்" என்றன்றோ
ஞ்சுகிறது நான். .... .... .... .... .... (௩)

மூ;—

மநம்புவேல்கண்நல்லாள் முன்னம்பெற்றவளைவண்ணநன் மா
ன்நம்பிநம்பியுமிங்கு வளர்ந்த தவனிவைசெய்தறியான் [மேனி
பாய்ந்நம்பிபுள்ளுவன் கள்வம்பொதியறைப் போகின்றவாதவழ்ந்திட்டு
ந்நம்பிநம்பியா ஆய்ச்சியர்க் குய்வில்லை யென்செய்கேனென்செய்கேனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ம நம்பு | அஞ்ஜனமணிந்த | இவை | இவ்வாறான தீம்புகளை |
| வல் | வேல்போன்ற | செய்தறியான் | செய்ததில்லை; |
| ண் | கண்களையுடையளாய், | பொய் நம்பி | பொய்யால் குறைவற்றவனாய் |
| ல்லாள் | ஆத்ம குணங்களையுடையளான தேவகிப் பிராட்டி | புள்ளுவன் | வஞ்சகரில் தலைவனாய் |
| | | கள்வம் | கள்ளத்தனத்துக்கு |
| பற்ற | பெற்ற | பொதியறை | ஒரு கொள்கலமாயிருந்துள்ள இக்கண்ணபிரான், |
| ளைவண்ணம் | சங்க (ஶங்஖) த்தின் நிறத்தை யுடைத்தாய் | | (தான் களவு செய்யாதவன் போலே) |
| ் | விலக்ஷணமாய் | | |
| | மாண்மையை யுடைத்தான | தவழ்ந்திட்டு | தவழ்ந்து |
| | | போகின்ற ஆ | போகிறபடி என்தான்! |
| மனி | திருமேனியை யுடைய | இந்நம்பி | நிரபேக்ஷனான இவன் |
| ன்நம்பி நம்பி | நம்பி மூத்தபிரானும் | நம்பியா | (இப்படி தீம்பால்) பூர்ணனும் போதைக்கு |
| யும் | | | |
| ன்னம் | முற்காலத்திலே | ஆய்ச்சியர்க்கு | (அபலைகளான) இடைச்சிகளுக்கு |
| ங்கு | இவ்வாய்ப்பாடியில் | | |
| ளர்ந்தது | வளர்ந்ததுண்டு; | உய்வு இல்லை | உஜ்ஜீவிக்கவழியில்லை; |
| வன் | அவன் | என்செய்கேன் | என்செய்கேனே. (௪) |

வண்ணெய்க்காக முறையிடப்போமோ? என்ன ; "அதுவன்று என்கருத்
" என்று சொல்லுகையிலே தாத்பர்யம் "பேதையேனித்யாதிக்கு" என்
ருளுகிறார் ( இத்தயிருமித்யாதி ). ... ... ... ... (௩)

வ்யா;—நாலாம்பாட்டு. (மைநம்பித்யாதி) மைபற்றின - அ
ஜநம் பற்றின வேல்போலேயாயிற்றுக் கண்ணில் † கருமையும் பு
மிருக்கிறபடி. அவ்வளவல்லாத ஆத்மகுணத்தையுடையவள்பெற்
(வளைவண்ண நன்மாமேனி) சங்கவர்ணனுயிறே நம்பிமூத்த பிரா
ருப்பது. தன்தமையன் தீம்பால் குறையற்றுனொருவனிறே. அவ
முற்காலத்திலே இங்கு விளையாடித்திரியும்போது நாங்கள் இப்ப
பட்டறியோம்.

(பொய்நம்பி) பொய்யால் குறைவற்றிருக்கிறவன். (புள்ளு
ன்) கண்ணி வைப்பாரைப்போலே கடைகிறபோதே துடங்கி "இ
கள் எங்கேவைப்பர்களோ?" என்று அடியொற்றிக்கொண்டு திரி
நிற்குமாயிற்று. (கள்வம்பொதியறை) களவிட்டு வைக்கைக்கொ
கொள்கலம். (பேர்கின்றவாதவழ்ந்து) இக்களவைச்செய்து தா
ல்லாதாரைப்போலே தவழாநிற்கும். (இந்நம்பி நம்பியாலாய்ச்சிய
குய்வில்லை) நிரபேக்ஷனை இவன் இவனாக, இவ்வூரில் இடைச்சிக
க்கு உஜ்ஜீவிக்கவிரகில்லை. (என்செய்கேனித்யாதி) இவர்கள்கீழே
ஙனே நான் இவ்வூரில் குடிகிடக்கும்படி. .... .... .... (

மூ;—

தந்தைபுகுந்திலன் நானிங்கிருந்திலேன் தோழிமாராருமில்லை
சந்தமலர்க்குழலாள் தனியேவிளையாடு மிடம்குறுகிப்
பந்துபறித்துத் துகில் பற்றிக்கீறிப் படிறன்படிறுசெய்யும்
நந்தன்மதலைக்கிங்கென் கடவோம் நங்காயென் செய்கேனென்செய்கேனே

அ௫;—நாலாம்பாட்டு. (மையித்யாதி) கீழில்பாட்டிலே யசோ
பிராட்டி கீழையகத்துநங்கைக்கு உத்தரமாம்படி எல்லாரையும் பார்த்துத்
னும் இழந்தபடி சொல்லிவிட்டார்; அத்தைக் கேட்டுக் கீழையகத்து நங்
மறுமாற்றம் காணமையாலே, வாய்வந்தபடி பழித்துக்கொண்டு நம்பிமூ
பிரானைக்கொண்டாடி, "இனி ஒருத்தருக்கும் இங்கேயிருந்து பிழைக்கவிர
லை" என்று கொண்டு, வெறுத்துக்கொள்ளுகிற படியைத் தாமநுபவிக்
றென்று ஸங்கதி.

"நல்லாள்" என்றதுக்கு - தாத்பர்யம் (அவ்வளவித்யாதி).

(கண்ணிவைப்பார்) வலைவைப்பார். (இவர்கள்) ராமக்ருஷ்ணர்கள்.

† (பா) பெருமையும் கூர்மையும்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| காய் | பூர்ணையான யசோதாய்! | இடம் | ப்ரதேசத்திலே |
| தை | (இப்பெண்பிள்ளையின்) தமப்பனுர் [லர்; | குறுகி | சென்றுகிட்டி, (அவள் அடித்துக் கொண் |
| ந்திலன் | வீட்டில் ப்ரவேசித்தி | பந்து | பந்தை [டிருந்த) |
| ர் | (தாயான) நானும் | பறித்து | பறித்தும் |
| கு | இந்த வீட்டில் | துகில் | பரியட்டத்தை |
| ந்திலேன் | இருந்தேனில்லை; | பற்றிக்கீறி | பிடித்துக் கிழித்தும் (ஆகஇப்படிப்பட்ட) |
| ழிமார் | தோழிமார்களில் | படிறு | தீம்புகளை |
| ம் | ஒருத்தியும் | செய்யும் | செய்யாநின்ற |
| லை | (அருகில்) இருந்திலள்; | படிறன் | தூ(தூ)ர்த்தனுய் |
| ம் | பரிமளம்மிக்க பூக்களணிந்த | நந்தன்மதலைக்கு | நந்தகோபர் குமாரனுன கண்ணனிடையாட்டத்திலே |
| லாள் | மயிர்முடியை யுடைய என் பெண்பிள்ளை | இங்கு | இவ்விடத்தில் |
| யே | அத்விதீயையாய் | என்கடவோம் என்செய்யக்கடவோம்; | |
| யாடும் | விளையாடாநின்ற | என்செய்கேன்! என்செய்கேனே?(ரு) | |

வ்யா;—அஞ்சாம்பாட்டு. (தந்தையித்யாதி) சொன்னபடியே க்கட்டிற்று. இவர்கள் தமப்பனுர் புகுந்திலர்; நானும் இங்கிருந் ன்; (தோழிமாராருமில்லை) கூட்டிக்கொடுக்கைக்குத் தோழி ருமில்லை. இவன்தான் பெண்பிறந்தார் தனியே விளையாடுமிடம்

---

அரு;—அஞ்சாம்பாட்டு. (தந்தையித்யாதி) கீழ்ப்பாட்டில் கிழையகத்து கமுறையிட்டுக் கொண்டிருக்கச்செய்தே ஏதேனும் சொல்லி, அசலகத் ரதேனும்பேசக்கேட்க மாட்டாத வந்தயசோதைப்பிராட்டியோடே மற் அசலகத்தொருத்தி பெண்ணைக்களவு கண்டபடியைச்சொல்லி முறைப் வுத்தசையையு மநுபவிக்கிருரென்று ஸங்கதி.

பாட்டில் ப்ரமேயத்தையெல்லாம் கடாக்ஷித்து, கீழ்ப்பாட்டில் "ஆய்ச்சி உய்வில்லை" என்றதுவும் திருவுள்ளத்திலோடி வ்யாக்க்யாதாவின் ஈடு கத் தாத்பர்யம் (சொன்னவித்யாதி). "இங்கென்கடவோம்" என்று வசநமாயிருக்கையாலே தன் பெண்ணைப் படுத்தினபடி எல்லார்க்கு கு மென்கிருளாகையாலே அருளுகிருர் (இவர்களென்று); - பெண்க றபடி. ... ... ... ... ... ... ... (ரு)

பார்த்துக்கொடுதிரியும். அவர்களோடே சென்றுகிட்டிப் பங்கை
பறித்தும், பரியட்டங்களைக்கிழித்தும். (படிறன்) பின்பு சொல்
வொண்ணாதபடி களவுசெய்யும். (நந்தன்மதலைக்கு) ப்ரபுக்கள் கி
குடியிருக்க வொண்ணாதே வாதாக்களுக்கு. .... .... (

மூ;—

மண்மகள்கேள்வன் மலர்மங்கைநாயகன் நந்தன்பெற்றமதலை
அண்ணலிலைக்குழலூதி நம்சேரிக்கே † யல்லில்தான் வந்தபின்னை
கண்மலர்சோர்ந்து முலைவந்துவிம்மிக் கமலச்செவ்வாய்வெளுப்ப
என்மகள்வண்ணமிருக்கின்றவா நங்கா யென்செய்கேனென்செய்கேனே.

| பதம். | உரை. |
|---|---|
| நங்காய் | பூர்ணையான யசோதா |
| மண்மகள் | ஸ்ரீ பூமிப்பிராட்டிக்கு[ய்! |
| கேள்வன் | வல்லபனாய், |
| மலர்மங்கை | தாமரைமலரில் திருவ வதரித்தருளின ஸ்ரீ |
| நாயகன் | நாயகனாய், [தேவிக்கு |
| நந்தன் | ஸ்ரீநந்தகோபர் |
| பெற்ற | பெற்ற |
| மதலை | சிறுப்பிள்ளையாய், |
| அண்ணல் தான் | ஸர்வசேஷியான கண்ணபிரானானவன், |
| இலை | இலையாலான |
| குழல் | முரளியை |
| ஊதி | ஊதிக்கொண்டு |
| அல்லில் | இரவில் [ற |
| நம் சேரிக்கே | நம்முடைய சேரியே |

| பதம். | உரை. |
|---|---|
| வந்தபின்னை | வந்தபிறகு, |
| கண்மலர் | நயனகமலமானது |
| சோர்ந்து | மிகவும் வதங்கி |
| முலை | முலைகளானவை |
| வந்து விம்மி | நெறித்துக்கிளர்ந்து |
| கமலம் | தாமரைபோலே |
| செம் | சிவந்திருந்துள்ள |
| வாய் | அதரமானது |
| வெளுப்ப | (ஆத்தஸாரமாய்ப் கையாலே) வெ மையைக் காட்ட |
| என் மகள் | என்னுடைய பெ |
| வண்ணம் | நிறமானது [ள்ளை |
| இருக்கின்றஆ | (வைவர்ண்யப்பட் இருந்தபடி பார |
| | என் செய்கேன்! என்செய்கே |

வ்யா.—ஆறும்பாட்டு. (மண்மகளித்யாதி) தாய்மாரும் த

அநு;—ஆறும்பாட்டு. (மண்மகளித்யாதி) கீழை அசலகத்தாள் பூ
ட்டாள்; அப்போதே அசல்சேரியில் நங்கை தன்மகளிருக்கின்றவற்
சொல்லிக்கூப்பிட, அந்தத் தசையையடைந்து அநுபவிக்கிறாரென்றுஸங்

அசல்சேரியானவளுக்கு ஸ்ரீபூவல்லபனென்னுமது தெரிந்தபடியெ
னென்ன; அதுக்கு இரண்டுவகையாக வருளுகிறார் (தாய்மாரித்யாதி). த

(இ)† (பா.) அல்லுற்றான்.

ாரோடு ஒருகோர்வையாயிருப்பாரும் உகக்கும் பாசுரம். "மண் மகள்நாதனோ? மாமலராள் நாயகனோ?" என்றாயிற்று உகப்பது. அன்றிக்கே, ப்ரணயதா(ர)ரையில் அவர்களுக்கு தேசிகனானவன்கி ஊர் இவளை இப்படிப்படுத்தினனென்னவுமாம். (நந்தன்பெற்றமதலை) அதுக்குமேலே பிறப்பாலுண்டான ஏற்றம். (அண்ணல்) தன்னு டைய சேஷித்வத்தைக்காட்டி எல்லாரையும் எழுதிக்கொண்டிருக்கு வன். (இலைக்குழலூதி) குழலையும் ஊதிக்கொண்டு ராத்ரியிலே ந்தபின்னை, (கண்மலர்சோர்ந்து) ஸம்போகாநந்தரம் விளைந்த லவிக்குறிகள். (கமலச்செவ்வாய்) தாமரைபோலேயிருக்கிற அதர னது. (வெளுப்ப) வெளுத்த என்றபடி. (என்மகள்வண்ணம்) வள்நிறம் பெறுகைக்கு நான் எத்தைச்செய்வேன். .... (௬)

மூ;—

ஆயிரங்கண்ணுடை யிந்திரனாருக் கன்றாயர் விழவெடுப்பப்
பாசனநல்லன பண்டிகளால் புகப்பெய்தவதனையெல்லாம்
போயிருந்தங்கொரு பூதவடிவுகொண் டுன்மகனின்றுநங்காய்
மாயனதனையெல்லாம்முற்ற வாரிவளைத்துண்டிருந்தான் போலும்.

| பதம். | உரை. |
|---|---|
| | நங்காய்!—; |
| ன்று | முற்காலத்தில் |
| பர் | இடையர்கள் |
| யிரம் கண் | ஸஹஸ்ராக்ஷனை |
| உடை | |
| திரனாருக்கு | தேவேந்த்ரனுக்காக |
| ழவு எடுப்ப | அந்தத்தினஉத்ஸவம் செய்வதற்கு |
| லன | நல்லவையான |
| னம் | பாத்ரங்களிலே (சேமித்து வைத்து) |
| ாடிகளால் | வண்டிகளாலே |
| ப்பெய்த | கொண்டுவந்து தள்ளப்பட்ட |
| னை எல்லா | அந்த அந்நராசி யடங்கலும், |

| பதம். | உரை. |
|---|---|
| இன்று | இன்றையதினம் |
| அங்கு | அவ்விடத்தில் |
| போயிருந்து | போயிருந்து, |
| ஒரு | அத்புதமானதொரு |
| பூதம் | பூதத்தின் |
| வடிவுகொண்டு | வடிவைப்பூண்டு |
| மாயன் | (அமுது செய்தருளின) ஆஸ்சர்யசேஷ்டிதமுடைய |
| உன்மகன் | உன் பிள்ளையானகண்ணன், |
| அதனை எல்லாம் முற்ற | அந்த அந்நராசி முற்றும் |
| வாரி | (கைகளால்) வாரி |
| உண்டு | அமுது செய்து |
| வளைத்திருந் | (அல்லாதாரைப்போலே) |
| தான்போலும் | சூழ்ந்து கொண்டிருந்தான்போலும். (எ) |

ப் பாட்டிப்பாடும்போது பிள்ளை இங்ஙன்சொல்லுவாரென்று கருத்து. (௬)

வ்யா;—ஏழாம்பாட்டு. (ஆயிரங்கண்ணித்யாதி) தான் ஆயிரங் கண்ணையுடையனாகையாலே இதரவிஸஜாதீயனாய், தான் தேவயோநியிலே பிறந்தவனாய், அத்தாலே துர்மாநியாயிருக்கிறவனுக்கு இடையர் உத்ஸவமாகப்போத்தி நல்ல பா (ஜ) ஜநங்களிலே சோற்றையெடுத்து சகடத்தாலே கொடுவந்துதள்ள, அத்தையடங்கலும் "கோவர்த்தநோஸ்மி" என்று தான் அமுதுசெய்த ஆஶ்சர்யசக்தியுக்தன். (அதனையித்யாதி)அத்தையடங்கலும் அமுதுசெய்தானாய், அல்லாதாரைப்போலே இருந்தானாயிற்று. .... .... (எ)

மூ;—

தோய்த்ததயிரும் நறுநெய்யும்பாலு மோரோகுடம்துற்றிடுமென்று
ஆய்ச்சியர்கூடி யழைக்கவும் நானிதற்கெள்கியிவனை நங்காய்
சோத்தம்பிரானிவை செய்யப்பெறு யென்றிரப்பனுரப்பகில்லேன்
பேய்ச்சிமுலையுண்டபின்னை யிப்பிள்ளையைப் பேசுவதஞ்சுவனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| | நங்காய்!- | ஆய்ச்சியர் | இடைச்சிகளுடைய |
| தோய்த்த | "தோய்த்து வார்த்த | கூடி | திரளாகக்கூடி |
| தயிரும் | தயிரையும் | அழைக்கவும் | கூப்பிடச்செய்தேயும் |
| நறு | (புதிதாக உருக்கப் பட்டு) பரிமளித [மான | நான் | (அவனைப்பெற்ற தாயான) நான் |
| நெய்யும் | நெய்யையும் | | |
| பாலும் | பாலையும் | இதற்கு | இந்தச்செயலுக்கு |
| ஓரோகுடம் | ஒவ்வொரு தடாக்களினின்றும் | எள்கி | ஈடுபட்டு, (அநந்தரம்) |
| துற்றிடும் என்று | (கண்ணபிரான்) அமுது செய்துவிடுவன்" என்று | | |

அரு;—ஏழாம்பாட்டு. (ஆயிரமித்யாதி) அசலகத்தாரும் அசல்சேரியாரும் எல்லாரும் ஏககாலத்திலே முறைப்பட்டபடியைக்கண்டு, "என்னபுதுமை நீங்களும் பிள்ளைபெற்றதில்லையோ? என்மகனித்தனை செய்யவல்லனோ?" என்றுயசோதைப் பிராட்டிசொல்ல, அத்தைக்கேட்டு எல்லாரும் ஒருமிடறாய்ச் சேர்ந்து, "பருப்பதத்தை யுண்டவனன்றோ? அவன் செய்யமாட்டாததுமொன்றுண்டோ?" என்கிறவர்கள்படியாலே, அநுபவிக்கிறுரென்று ஸங்கதி.

(பாஜநங்களிலே)- பாத்ரங்களிலே. "பூதவடிவுகொண்டு" என்றவநந்தரம் "உண்ட" என்றுசேஷம். ... ... ... ... ... (

| | |
|---|---|
| இவனை | இப்பிள்ளையை நோக்கி |
| பிரான் | "உபகாரகனே! |
| சோத்தம் | உனக்கோரஞ்ஜலி; |
| இவை | இவ்வாறான தீம்புகளை |
| செய்யப்பெறுய் | (இனி) செய்யாதொழியவேணும்" |
| என்று | என்று அநுநயம்பண்ணிக் கொண்டு |
| இரப்பன் | (காலைப்பிடித்து) ப்ரார்த்திப்பேன்; |
| | (அத்தனைபோக்கி,) |
| உரப்பகில்லேன் | சீறிப்பேசமாட்டுகிறிலேன்; |
| | (இப்பிள்ளையானவன்) |
| பேய்ச்சி | பூதனையின் |
| முலை | (விஷமிஸ்ரமான) முலையை |
| உண்டபின்னை | அமுதுசெய்தபின்பு, |
| இப்பிள்ளையை | இப்பிள்ளையிடையாட்டத்திலே |
| பேசுவது | பொடிந்து வார்த்தை சொல்லுவதைப் பற்றி |
| அஞ்சுவனே | மிகவும் பயப்படாநின்றேன். (அ) |

வ்யா;—எட்டாம்பாட்டு. (தோய்த்தவித்யாதி) நின்ற நின்ற அவஸ்த்தைகள்தோறும் சேஷியாதபடி பண்ணினுயிற்று. தோய்த்து அட்டின தயிரையும், புத்துருக்கு நெய்யையும், நெய்வாங்குகைக்கு யாக்யமானபாலையும் சேஷியாதபடியாக அமுது செய்யுமென்று பூய்ச்சியரெல்லாரும் கூப்பிடச்செய்தேயும். (நானிதற்கெள்கி) நான் )துக்கிடுபட்டு, இவனை ஆக்ரஹியாதே (பிரானே சோத்தம்) "இங்ஙனே செய்யலாகாதுகாண்" என்றும் இரவாநிற்பன். என்செய்ய, ன்மகனனபின்பு நிக்ரஹிக்கலாகாதோவென்ன; இவன் பூதனை டையமுலையை அமுதுசெய்தபின்பு என்னுடைய பிள்ளையென்றி க்க அஞ்சுவன். .... .... .... .... .... (அ)

---

அந;—எட்டாம்பாட்டு. (தோய்த்தவித்யாதி) கீழ்ப்பாட்டிலே எல்லா ம்கூடி, "இந்த்ரனுக்கிட்ட சோற்றையெல்லாமுண்டவனுக்கு இவ்வூர்பால் வண்ணெய் முதலானவை சேஷிக்க விரகுண்டோ? தீம்பிலே கைவளரும் 2 பண்ணினுய் நீயன்றோ" என்று கூசலிட, அத்தையெல்லாம்கேட்டு ஆர ரமடங்கவிட்டு எல்லாரும் கேட்கும்படி அதிலே ஒருத்தியைப்பார்த்துப் பேய்முலையுண்டவனை நான்உரப்பஅஞ்சுவன், இங்குஎன்னைக் குற்றம்சொல் வேண்டா" என்ற அவன் தாயாயநுபவிக்கிறுரென்று ஸங்கதி.

(நின்றநின்ற அவஸ்த்தைகள்) என்றது - ஒருகவ்யத்துக்கே தயிராகை தலானவெல்லாத் தசைகளென்கை. (அட்டின) வார்த்த. (ஆக்ரஹியாதே) ஈபியாதே. ... ... ... ... ... ... ... (அ)

மூ;—ஈடும்வலியுமுடையவிந்நம்பி பிறந்தவெழுதிங்களில்
ஏடலர்கண்ணியினானை வளர்த்தி யமுனைநீராடப்போனேன்
சேடன்திருமறுமார்வன் கிடந்துதிருவடியால் மலைபோல்
ஓடும்சகடத்தைச்சாடியபின்னை யுரப்புவதஞ்சுவனே. (௯

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஈடும் | சரீரபலத்தையும் | திரு | பிராட்டியையும் |
| வலியும் | மிடுக்கையும் | மறு | ஸ்ரீவத்ஸத்தையும் |
| உடைய | உடையனாய் | மார்பன் | திருமார்விலே உடை யனான இவன், |
| இந்நம்பி | பூர்ணனான இப்பிள்ளை | | |
| பிறந்த | அவரித்த | மலைபோல் | ஒருமலைபோலே |
| எழுதிங்களில் | ஏழாம்மாஸத்திலே, | ஓடும் | ஊர்கின்ற |
| ஏடு | இதழ்களானவை | சகடத்தை | (அஸுராவிஷ்டமான) சகடத்தை |
| அலர் | அலராநின்றுள்ள | | |
| கண்ணியினானை | மாலையாலே அலங்கரிக் கப்பட்டுள்ள இப் பிள்ளையை | கிடந்து | தான் கிடந்த கிடை மாறாதே |
| | | திருவடியால் | திருவடியாலே |
| வளர்த்தி | (குளிப்பாட்டித்) தூங் கப்பண்ணிவிட்டு, | சாடியபின்னை | முறித்துத் துகளாக் ன பிறகு |
| யமுனை | யமுநாநதியிலே | உரப்புவது | (இவனைச்) சீறிப்பே ம்விஷயத்திலே |
| நீராட | நீராடுவதற்காக | | |
| போனேன் | போனேன்; | அஞ்சுவன் | பயப்படாநின்றேன். (௯ |
| சேடன் | மிகவும்இளையனாய் | | |

வ்யா;—ஒன்பதாம்பாட்டு. (ஈடுமித்யாதி) கனமுடைமையு மிடுக்குமுடைய இப்பிள்ளை ஏழாமாஸத்திலேகுளிப்பாட்டிச்செவ் யுடைத்தான மாலையைச்சூட்டி வளர்த்திவைத்துப்போனேன், யமு னையிலே நீராட. (சேடன்) அத்யந்த சைசவத்தையுடையவன்; இ

அரு;—ஒன்பதாம்பாட்டு. (ஈடுமித்யாதி) எல்லாருங்கூடி "பேய்ச்சிமுலை யுண்டத்தை நினைத்தஞ்சுவன்" என்றாய்; பிள்ளையினுடைய ஜீவநாத்ருஷ்ட த்தாலே அவள் முடிந்தாள்; அத்தைக்கண்டு நீ அஞ்சுகைக்குப் போருமோ வென்ன; அது ஒன்றுமேயோ? சகடுதைத்தபடியைக் கேளுங்கோளென்கி ளென்று ஸங்கதி.

(கனமுடைமை)-காயபலம். (மிடுக்கு)-பராபிபவநஸாமர்த்த்யம். (ஏடு) தளமாய், (அலர்)புஷ்பமாய், இப்படி விசேஷித்ததுக்குக்கருத்து(செவ்வி யாதி). ... ... ... ... ... ... ... ... (

ன் செய்யும் செயல்களுடைய ஸர்வேஸ்வரனேடொக்கும். (திருவடியால்) திருவடிகளாலே மலைபோலே ஊருகிற சகடத்தைச்சாடித்து களாக்கினபின்பு இவனைப்பொடிய அஞ்சுவன். .... .... (கூ)

மூ;—

அஞ்சுவன்சொல்லி யழைத்திட நங்கைகாளாயிர நாழிநெய்யை
பஞ்சியமெல்லடிப்பிள்ளைகளுண்கின்ற பாகந்தான் வையார்களே
கஞ்சன்கடியன் கறவெட்டுநாளி லென்கைவலத்தாதுமில்லை
நெஞ்சத்திருப்பனசெய்துவைத்தாய்நம்பீ யென்செய்கேனென்செய்கேனே.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நங்கைகாள் | பூர்ணைகளான பெண்காள்! | கடியன் | மிகவும் க்ரூரனுயிரா நின்றான்; |
| சொல்லி | (இவன் செய்த தீம்புகளைச்) சொல்லி | கறவு | (அவனுக்குக் கட்டவேண்டிய)கப்பமானது |
| அழைத்திட | (இவனை) அழைக்க | எட்டுநாளில் | எட்டு நாளைக்குள் கட்டவேண்டும்படி ஸமீபித்தது; |
| அஞ்சுவன் | பயப்படாநின்றேன்; | | |
| நம்பீ | கண்ணபிரானே! | | |
| பஞ்சியம் | பஞ்சுபோலே | என் | எனக்கு |
| மெல் | ம்ருதுவான | கைவலம் | கைம்முதல் |
| அடி | அடிகளையுடைய | ஆதும் இல்லை | ஒன்றுமில்லை; (ஆனபின்பு) |
| பிள்ளைகள் | (உன்னேடொத்த ஆயிரம்) பிள்ளைகள் | நெஞ்சத்திருப்பன | (என்னுடைய) நெஞ்சில்புண்பட்டிருக்கும்படியான கார்யங்களை |
| உண்கின்ற | புஜியாநின்ற | | |
| ஆயிரநாழிநெய்யை | ஆயிரநாழிகளிலே நிறைக்கப்பட்டநெய்யில் | செய்துவைத்தாய் | பண்ணிவைத்தாய்; |
| பாகந்தான் | பாதிபாகத்தையும் | | |
| வையார்கள் | சேஷித்து வைக்கிறிலர்கள்; | என்செய்கேன் | என்செய்கேனே. (கo) |
| கஞ்சன் | கம்ஸனானவன் | | |

அந;—பத்தாம்பாட்டு. (அஞ்சுவனித்யாதி) கீழ் இரண்டு பாட்டிலும், பிள்ளைச் செவ்வைக் கேட்டைக்கேட்டுத் தங்களெல்லாரும் முகங்களைப்பார்த்துக்கொண்டு இனி மறுமாற்றமுண்டோ வென்று திகைத்திருக்க, அவர்களெல்லாரையும் பார்த்து, "நீங்கள் எது சொல்லிலும், இவனைக்கூப்பிட நான் அஞ்சுவன்;" என்று நிருத்தரமாகச்சொல்ல, எல்லாரும் "இப்படியுண்டோ? உனக்குக் கட்டவுமடிக்கவும் எளியனுயிருக்க, உரப்ப அஞ்சுவன்" என்கிற

வ்யா;—பத்தாம்பாட்டு. (அஞ்சுவன் சொல்லியழைத்திட (பஞ்சியமித்யாதி) பஞ்சுபோல ம்ருதுவான அடியையுடையராயிரு க்கிற ;பிள்ளைகள் ஆயிரநாழி நெய்யை உண்கிறவிடத்தில் பாதியுட சேஷியாதபடியாயிற்று புஜித்தது. (கஞ்சன்கடியன்) கம்ஸனை வன் சாலக்கொடியவன். (கறவெட்டுநாளில்) கறவென்று-இறைக் குப்பேர். எட்டுநாளில் இறை இடையர் பாலிருக்கக் கடவதாயிரு க்குமிறே. (என்கைவலத்தாதுமில்லை) எனக்குக் கைம்முதலொன்று மில்லை. அன்றிக்கே, என்கையில் பலமில்லை என்னவுமாம். (நெஞ் சத்திருப்பன செய்துவைத்தாய்நம்பீ) என் நெஞ்சுப்புண்மாறுதபடி யாகப் பண்ணிணுய்; நான் இக்கார்ஹஸ்த்ய தர்மத்தை எங்ஙனே அநுஷ்டிக்கும்படி. .... .... .... .... .... (கo

மூ;—

அங்ஙனும்தீமைகள்செய்வர்களோ நம்பீ ஆயர் மடமக்களைப்
பங்கயநீர்குடைந்தாடுகின்றார்கள்பின்னே சென்றொளித்திருந்து
அங்கவர்பூந்துகில்வாரிக்கொண்டிட் டரவேரிடையாரிரப்ப
மங்கைநல்லீர்வந்துகொள்மினென்று மரமேறியிருந்தாய்போலும்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நம்பீ | கண்ணபிரானே ! | செய்வர்களோ | செய்யக் கடவதோ? |
| ஆயர் | இடையர்களுக்கு | பங்கயநீர் | தாமரைப் பொய்கை |
| மடம் | பவ்யைகளான | குடைந்து | அவகாஹித்து [யிலே |
| மக்கள் | பெண்கள்திறத்திலே | ஆடுகின்றார்கள் | நீராடப்புக்க ஸ்த்ரீக |
| அங்ஙனும் | அப்படியுங்கூட | | ளுடைய |
| தீமைகள் | தீம்புகளை | | |

விதில் நாம் குடிவாங்குமித்தனை. பெண்களைப் புடைவைகளை உரிவது முதலான தீமைகளுக்கு ஒரு கணக்கில்லையென்று முறைப்பட, அவர்களை விட்டு அவர்கள் முன்னே தன்பிள்ளையை நியமிக்க ஒருப்படுகிறாள் மேல்நாலு பாட்டென்று ஸங்கதி.

*சோறே அறம்செய்யும் நந்தகோபாலன்பிள்ளையாகையாலே "நீ தான் *தன் னேராயிரம் பிள்ளைகளல்லது உண்பதில்லை; அவர்களெல்லார்க்கும்-ஆயிரநாழி நெய்யைத்தாராதே தீராது; அவர்களுண்ணும்போது சேஷித்ததை யாகிலும் இறைக்குக்கூட்டிவைக்கவிரகில்லை. கொண்டுவிற்கைக்குக்கைம்முதலுமில்லை; நீயோ என்னகத்திலே இத்தனை தீம்புசெய்கிறாய்" என்று வெறுக்கிறாளென்று விவக்ஷித்து உட்கருத்தருளுகிறார் (என் நெஞ்சித்யாதி வாக்யத்வயத்தாலே).

| | |
|---|---|
| பின்னேசென்று | பின்னே போய் |
| ஒளித்திருந்து | மறைந்து கொண்டிருந்து |
| அங்கு | அவ்விடத்தில் |
| அவர் | அந்த ஸ்திரீகளுடைய |
| பூ | அழகிய |
| துகில் | பரியட்டங்களை யடைய |
| வாரிக்கொண்டிட்டு | வாரிக்கொண்டு, |
| | (அவ்வளவிலே) |
| அரவு ஏர் | அரவு போலே நுண்ணிதான |
| இடையார் | இடையையுடைய அப்பெண் பிள்ளைகள் |
| இரப்ப | (தந்தாம் பரியட்டங்களை) யாசிக்க, |
| நல் மங்கைமீர் | "அழகிய பெண்காள்! |
| வந்து | நானிருக்கு மிடமேற வந்து |
| கொண்மின் | உங்கள் துகில்களைப் பெற்றுப்போங்கோள்" |
| என்று | என்றுசொல்லிக்கொண்டு |
| மரம் | மரத்தினுச்சியிலே |
| ஏறியிருந்தாய் | ஏறியிருந்தாய். |
| போலும் | (கக) |

வ்யா;—பதினோராம்பாட்டு. (அங்ஙனுமித்யாதி) சொல்லவொண்ணுதபடியான தீம்புகளை விளைக்கக்கடவதோ? ஒரு குடியிலே பிறந்த பெண்பிள்ளைகளைச்செய்யும் தீம்பு. தாமரைப் பொய்கையிலே சென்று ஒளித்திருந்து அவர்களுடைய பரியட்டங்களையடைய வாரிக்கொண்டு. (அரவேரிடையாரித்யாதி) அரவுபோலே நுண்ணிய இடையையுடைய ஸ்த்ரீகள் இரக்க, (மங்கைநல்லீர் துகில் கொண்மினென்று மரமேறியிருந்தாய்போலும்) வேணுமாகில் இங்ஙனே ஏறிவாங்கிக்கொள்ளுங்கள் என்றிருந்தாய். .... .... (கக)

மூ;—

அச்சந்தினைத்தினையுமில்லையிப்பிள்ளைக் காண்மையுஞ்சேவகமும்
உச்சியில்முத்திவளர்த்தெடுத்தேனுக்குரைத்திலன்தானின்றுபோய்
பச்சிலைப்பூங்கடம்பேறி விசைகொண்டுபாய்ந்துபுக் காயிரவாய்
நச்சழல்பொய்கையில்நாகத்தினேடுபிணங்கிநீவந்தாய்போலும்.(கஉ)

---

அந;—பதினோராம்பாட்டு. (அங்ஙனுமித்யாதி) கீழ்ப்பாட்டிலே "என் செய்கேன்" என்று தன்னைப்பார்த்துவேறேயும் சிலரைப்பாரா அச்சம்தோற்ற நிற்க, அநந்தரம் நங்கைகள் சொன்ன தீம்புகளைத்தான் சொல்லி இப்படி செய்ய வடுக்குமோ வென்று கேட்கிருளென்று ஸங்கதி.

(செய்யும் தீம்பு) என்றவநந்தரம் "ஏதென்று" என்று சேஷம்; இதுக்கு "கொள்ளுங்களென்று, இருந்தாய்" என்றத்தோடே அந்வயம். (கக)

| பதம் | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| இப்பிள்ளைக்கு | இந்தப்பிள்ளைக்கு | பூ | பூத்துக்கிடந்த [தி |
| தினைத்தினை | ஈஷத்தும் | கடம்பு ஏறி | கடப்பமரத்தின்மேலே |
| அச்சம் இல்லை | பயமில்லை ; | விசைகொண்டு | பெரியவேகத்தோடே |
| ஆண்மையும் | பௌருஷமும் [து ; | பாய்ந்துபுக்கு | (மடுவிலே)ஏறப்பாய்ந்து, |
| சேவகமும் | சேவகப்பாடுமே யுள்ள | ஆயிரம் வாய் | ஆயிரம் வாயாலும் |
| உச்சியில்முத்தி | உச்சிமோந்து | நச்சு அழல் | விஷத்தை உமிழா நிற்பானாய்[ கிடக்கிற |
| வளர்த்துஎடுத்தேனுக்கு | வளர்த்தெடுத்த தாயான எனக்கு | பொய்கையில் | நச்சுப் பொய்கையிலே |
| தான் | தான் | நாகத்தினோடு | காளிய நாகத்தினோடு |
| உரைத்திலன் | (செய்யப்புகும் செய்கைகளைச்) சொல்லுகிறிலன் ; | நீ | இளம்பருவத்தனை நீ |
| இன்று போய் | இன்றைக்குப்போய் | பிணங்கி | போர்செய்து |
| பச்சிலை | பசுமையான இலைகளை யுடைத்தாய் | வந்தாய்போலு | வந்தாயோதான். |
| | | ம் | (௧உ) |

வ்யா;—பன்னிரண்டாம்பாட்டு. (அச்சமித்யாதி) பயமேகதேசமும் கூட வில்லை, இப்பிள்ளைக்கு. (ஆண்மையித்யாதி) ஆண்பிள்ளைத்தனமும் சேவகப்பாடுமேயாயிற்று உள்ளது. (உச்சியில்முத்தி) உச்சி மோந்து வளர்த்தெடுத்தேனுக்கு, ஒன்றுமுரைத்திலன்தான்.இன்றுபோய்,(பச்சிலையித்யாதி) திருவடிகளோடுண்டான ஸ்பர்ஶத்தாலே தழைத்துப் பூத்தகடம்பிலே ஏறிப்பெரிய வேகத்தாலே மடுவிலே ஏறப்பாஞ்சு; (ஆயிரவாயித்யாதி) ஆயிரம் வாயாலும் விஷத்தை உமிழாநிற்பானாய் தான் நச்சுப்பொய்கையிலே கிடக்கிற காளியனோடே பிணங்கி வந்தாய்போலே இருந்தது. .... (௧உ)

---

அரு;—பன்னிரண்டாம்பாட்டு. (அச்சமித்யாதி) கீழ்ப்பாட்டிலே பொய்கையிலே பெண்களோடு பிணங்கினபடியைச் சொல்லச்செய்தே, நச்சுப்பொய்கையிலே போனது ஸ்ம்ருதிவிஷயமாய், அதுக்கு வயிறு மறுகியத்தைச் சொல்லி வெறுக்கிறாளென்று ஸங்கதி.

"தினைத்தினை"-எள்ளத்தனையென்னுமாபோலே, அல்பத்தைச்சொல்லுகிறதென்கிறார் ( பயமித்யாதி ). தினை-க்ஷுத்ரதாந்யம்; "இப்பிள்ளைக்கு" என்கையாலே நங்கைகளையும் ஒருகண்ணாலே பார்த்துச்சொல்லி, மேலே இவனை ஒருகண்ணாலே பார்த்துச் சொல்லுகிறாளென்று கொள்வது. ... (௧உ)

மூ;—

தம்பரமல்லனவாண்மைகளைத் தனியேநின்றுதாம்செய்வரோ?
எம்பெருமானுன்னைப்பெற்றவயிறுடையேனினியானென்செய்கேன்
அம்பரமேழுமதிருமிடிகுர லங்கனல்செங்கணுடை
வம்பவிழ்கானத்துமால்விடையோடு பிணங்கிநீவந்தாய்போலும்.

| பதம். | உரை. |
|---|---|
| எம்பெருமான் | எனக்குப்பெருமையை விளைவிக்கக் கடவ கண்ணனே! |
| தாம் | ஓரோ காரியங்களிலே யிழிவார் |
| தம்பரம் அல்லன | தந்தாமால் செய்து தலைக்கட்ட வொண் |
| ஆண்மைகளை | வீரச்செயல்களை[ணாத |
| தனியேநின்று | தனித்து நின்று |
| செய்வரோ | செய்யக்கடவர்களோ?; |
| உன்னை | இப்படி அஸாத்யமான செயலைச் செய்கிற |
| பெற்ற | பெற்ற [உன்னை |
| வயிறுஉடையேன் | வயிற்றை யுடையளான |
| யான் | நான் |

| பதம். | உரை. |
|---|---|
| இனி என்செய்கேன் ;— | |
| அம்பரம் ஏழும் | உபரிதந லோகங்களெல்லாம் |
| அதிரும் | அதிரும்படியாக |
| இடி | முழங்காநின்றுள்ள |
| குரல் | த்வநியையுடைத்தாய் |
| அனல் | நெருப்புப்போலே |
| செம் | சிவந்த |
| கண் உடை | கண்களை யுடைத்தாய் |
| மால் | கறுத்திருந்துள்ள |
| விடையோடு | ரிஷபங்களோடே |
| வம்பு அவிழ் | மணம்மாறுதேநித்ய வஸந்தமான |
| கானத்து | அச்சோலைக்குள்ளே |
| பிணங்கிநீவந்தாய்போலும். (௧௩) | |

வ்யா;—பதின்மூன்றாம்பாட்டு. (தம்பரமித்யாதி) ஓரோகாரியங்களிலே இழிவார் தந்தாமால் செய்து தலைக்கட்டலாம் கார்யங்களிலே யன்றோ இழிவது. (ஆண்மைகள்) ஓரோவொன்றையே

அரு;—பதின்மூன்றாம்பாட்டு. (தம்பரமித்யாதி) கீழ்ப்பாட்டில் "நாகத்தினொடு பிணங்கி நீ வந்தாய்" என்னக்கேட்டு, நீஇதுக்கஞ்சவேணுமோ? சிறுப்பிள்ளையாயிருக்கச் செய்தே நான் நச்சுமுலையுண்டதாகச் சொன்னாயே, இவ்விஷயம் எனக்கு ரஸ்யமானது ஆஜந்மஸித்தமென்று ப்ரஸித்தமா யிருக்கையாலே "விஷமேறாத ப்ரக்ருதி இவன்" என்று தேறியிருக்கலாமே யென்ன; அதுவொன்றுமோ தேறியிருக்கைக்கு; மலைபோலே பெரியவிடைகளின்மேல் விழுந்ததுக்கு நானென்செய்கே னென்கிறாளென்று ஸங்கதி.

கார்யங்களை என்னவேண்டியிருக்க, "ஆண்மை" என்று விசேஷசப்தத்தாலே சொல்லுவானென்னென்ன வருளுகிறார் (ஓரோவென்று தொடங்கி).

தலைகாணவொண்ணுதபடியிருக்கை. (தனியே நின்று) நம்பி மூத்த பிரானோடே கூடநின்று செய்தானாகில் கண்ணெச்சில் வாராதபடி அவன் தலையிலே ஏறிடலாம். (தாம்செய்வரோ) தந்தாமையும் பார்க்கவேண்டாவோ? (எம்பெருமான்) உன்னைப்பெற்றவிதுவே அமையாதோ வயிற்றெரிச்சலுக்கு வேண்டுவது. நீ ஒருசெயலைச் செய்யவேணுமோ? (அம்பரமேழும்) உபரிதநலோகங்கள் அதிரும்படியான த்வநியையுடைத்தாய், அகவாயில் மரமெல்லாம் தெரியும்படி நெருப்புப்போலே சிவந்தகண்ணையுடைத்தாயிருக்கிற வ்ருஷபங்களோடு கூட நித்யவஸந்தமான சோலைக்குள்ளே பிணங்கிவந்தாய் போலேயிருந்தது என்கிறாள். .... .... .... .... .... (கந)

மூ;—அன்னநடைமடவாய்ச்சி வயிறடித்தஞ்சஅருவரைபோல்
மன்னுகருங்களிற்றாருயிர்வவ்விய மைந்தனைமாகடல்சூழ்
கன்னிநன்மாமதிள்மங்கையர்காவலன் காமருசீர்கலிகன்றி
இன்னிசைமாலைகளீரேழும்வல்லவர்க் கேதுமிடரில்லையே.

திருமங்கையாழ்வார் திருவடிகளேசரணம்.

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| அன்னநடை | ஹம்ஸகதியையும் | மைந்தனை | மிடுக்கனான கண்ண ராண் விஷயமாக, |
| மடம் | ஆத்மகுணத்தையு முடையளான | மாகடல் | அகழாகப் போரும்படி யான கடலாலே |
| ஆய்ச்சி | யசோதைப் பிராட்டியானவள் | சூழ் | சூழப்பட்டதாய், |
| வயிறுஅடித்து | வயிற்றிலே அடித்துக் | கன்னி | ஶாஶ்வதமாய் |
| அஞ்ச | அஞ்சும்படி,[கொண்டு | நல் | விலக்ஷணமாய் |
| அருவரைபோல் | பெரியதொருமலைபோலே | மா | அரணாகப் போரும்ப யான் ஓக்கத்தையு டைத்தான |
| மன்னு | பொருந்தியிருக்கிற | | |
| கரு | கருமையையுடைய | மதிள் | மதிளையுடைய |
| களிறு | குவலயாபீடத்தின் | மங்கையர் | திருமங்கையி லுள்ள |
| ஆருயிர் | அருமையான உயிரை | காவலன் | நிர்வாஹகராய் [க் |
| வவ்விய | அபஹரித்த | காமரு | ஸ்ப்ருஹணீயமான |

(தலைகாண)எல்லைகாண. வ்யாக்யாதருவாக்யம் (நம்பியித்யாதி). (தந்தாம தன் ஸௌகுமார்யத்தைப் பென்கை. ... ... ... ... (க

| | | | |
|---|---|---|---|
| சீர் | கல்யாணகுணங்களையு டையரான | மாலைகளீரேழு | சொல்மாலையான பதி ஞன்கு பாசுரங்களை |
| கலிகன்றி | ஆழ்வார் (அருளிச்செய் [த] | வல்லவர்க்கு | ஓதவல்லவர்களுக்கு [யும் |
| இன் | இனித்தான் | இடர் | துன்பமானது |
| இசை | இசையையுடைய | ஏதும் இல்லை | ஈஷத்துமில்லை. (௧௪) |

வ்யா;—பதினலாம்பாட்டு. (அன்னமித்யாதி) ஆகர்ஷகமான நடையையுடையளாய், ஆத்மகுணேபேதையாயிருக்கிற யசோதைப் பிராட்டியானவள் வயிற்றிலே அடித்துக்கொள்ள. (அருவரை போல்) மலை கால்கொண்டு நடந்தாப்போலேயாய், கண்டார்கண்கள் பிஸிறிப்படும்படியிருக்கிற ஆனையை முடித்துப் பொகட்டமிடுக்கனே. (மாகடல்) கடலை அரணாகவுடைத்தாய் அரணுகப்போரும்படியான மதிளையுடைத்தான திருமங்கைக்கு நிர்வாஹகரான ஆழ்வார். (இன்னிசையித்யாதி) இத்திருமொழியை வல்லவர்களுக்கு யசோ

ஸ்ரீ;—பதினலாம்பாட்டு. (அன்னமித்யாதி) இவ்வாழ்வாருக்கு யசோதைப்பிராட்டி தசைபிறந்து க்ருஷ்ணன் தீம்புகளையும் அதிமாநுஷசேஷ்டிதங்களையும் ஸாக்ஷாத்கரித்து அநுபவிக்கும்போது, பத்தாம்பாட்டிலே நேரே அவனோடு வார்த்தை சொல்லுகையாலுண்டான அநுபவாதிசயத்தாலும், வயிறுமறுகும்படியான ஆண்மைகளையும் திருமேனிஸௌகுமார்யாதிகளையும் கண்டு வயிறடித்துக்கொள்ளும்படியான ப்ரேமத்தாலும், கீழ்த்திருமொழிகளின் கணக்கிலே பத்துப்பாட்டாக வருளிச்செய்யும் கட்டளையும் மறந்தும் ஈரேழாக வநுஸந்தித்தாரென்று கண்டுகொள்வது.

கீழ்ஸௌகுமார்யத்துக்கு அஞ்சினபடிசொல்லி, இதில் வயிறுபிடித்தபடி சொல்லிற்றென்று ஸங்கதி. அந்த அச்சம் தீரும்படிக்குக் குவலயாபீடத்தைக் கொன்று பெருமிடுக்கைக்காட்டத் தெளிந்தவநந்தரம், இத்திருமொழிக்குப் பலம்சொல்லுகிறரென்று மேலுக்கு ஸங்கதி.

தீம்புகளைச்சொல்லிப் பழியிடுகிறபாட்டுக்கள் ஒரேழும், சேவகத்தைப் பேசுகைப்ராதாந்யேந தோற்றும்படியான தோரேழுமாகப் பிரித்து "ஈரேழுமென்றுர்"என்று விவக்ஷித்து, ப்ரக்ருதோபயுக்தமாக வருளுகிறுர் (இத்திருமொழியை யித்யாதி). ... ... ... ... ... ... (௧௪)

ஜீயர்திருவடிகளே சரணம்.



தைப்பிராட்டியுடைய அநுபவத்தில் குறைய அநுபவிக்கவேண்டா வென்கிறார். .... .... .... .... .... .... (கச)

பெரியவாச்சான்பிள்ளை திருவடிகளே சரணம்.

## பெரியதிருமொழி
## பத்தாம்பத்து ஏழாந்திருமொழி முற்றிற்று.

ஆழ்வார் திருவடிகளேசரணம்.

## பத்தாம்பத்து எட்டாந்திருமொழி
### காதில் ப்ரவேசம்.

வ்யா;—வெண்ணெயையும் பெண்களையுமொக்கக் களவுகாணு மது தவிர்ந்து அவர்களும் கைபுகுந்து நினைத்தபடியே ஸம்ஶ்லேஷ மும் ப்ரவ்ருத்தமாய் நின்றதுகிழ்; இனி இது ப்ரஸித்தமாம்படியான வாறே அகலநின்றான்; இவர்களுக்கு ப்ரணயரோஷம் தலையெடுத்து ஸம்ஶ்லேஷத்தினுடைய மத்யந்திநமாய், அறமுருடுகொளுத்தியி ருக்க, அவனும் வருந்தி காலைக்கையைப்பிடித்து ஸம்ஶ்லேஷித்தபடி யைப் பேசுகிறதாயிருக்கிறது.

மூ;—காதில்கடிப்பிட்டுக் கலிங்கமுடுத்துத்
தாதுநல்ல தண்ணந்துழாய்கொ டணிந்து
போதுமறுத்துப் புறமேவந்துநின்றீர்
ஏதுக்கிதுவென் னிதுவென் னிதுவென்னோ. (க)

அரு;—காதில் ப்ரவேசம். "நந்தன்பெற்றமதலை நஞ்சேரிக்கே அல்லில் தான் வந்தபின்னை, கண்மலர் சோர்ந்தித்யாதி - என்மகள்வண்ணமிருக்கின்ற வாநங்காய், என்செய்கேன்" என்கையாலும், "அங்ஙனம் தீமைகள்செய்வர்க ளோநம்பீ" என்றுதாயும் ஆணைவிட்டபடியாலும், உந்மஸ்தகரஸம் தலையெ டுக்கும்படி ஸம்ஶ்லேஷம் ப்ரவ்ருத்தமாக, அதுஸாத்மிக்கவேணுமென்று, பிரி ந்தவநந்தரம், பிரிவுபொறுக்கமாட்டாமல் ஊடுதல்தலையெடுத்ததென்றும் ஸங்கதியை யருளுகிறார் (வெண்ணெயையுமித்யாதி). (ப்ரஸித்தமாம்படி) மிகவும் உந்மஸ்தகமாம்படி கைபுகுந்ததென்னும்படி. (மத்யந்திநம்) நாளுக்கு மத்யம்-ஸாயங்காலமென்றபடியாய், அத்தாலே ஸம்ஶ்லேஷத்துக்கு ஸாயங் காலமாவது-கேவலம் விஶ்லேஷமுமன்றிக்கே, ஸம்ஶ்லேஷமுமன்றிக்கே, முன்னேநிற்கிறநிலையானவாறே யென்கை. ... ... ... ... *

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| காதில் | காதிலே | அணிந்து | (திருமுடியை) அலங்கரித்து |
| கடிப்பு | கர்ணபூஷணத்தை | போது | (வருகைக்குக் குறிப்பிட்டுச் சொன்ன) காலத்தை |
| இட்டு | சாத்திக்கொண்டு, | மறுத்து | அதிக்ரமித்து |
| கலிங்கம் | கறுப்புத் திருப்பரியட்டத்தை | புறமே | பின்புறத்தில் |
| உடுத்து | தரித்துக்கொண்டு, | ஏதுக்கு | ஏதுக்காக |
| தாது | இதழ்களையுடைத்தாய் | வந்துநின்றீர் | வந்துநின்றீர்? |
| நல்ல | விலக்ஷணமாய் | இது என் | இதென்னகாரியம்; |
| தண் | குளிர்ந்த | | இது என்? இது என்னோ! (க) |
| அம் | அழகிய | | |
| துழாய்கொடு | திருத்துழாய் மாலையைக்கொண்டு | | |

வ்யா;—முதற்பாட்டு. (காதில் கடிப்பிட்டு) பெண்களோடே ஸம்ஶ்லேஷிக்க வருகிறவன் கடிப்பிட்டு வருகையாவதென்னென்றில்; பால்யாவஸ்த்தையில் பிடிகொடாதே தீம்பில் கைவளர்ந்து திரிகையாலே காதுகுத்த அவஸரமில்லை; பின்பு பருவம் நிறைந்து விளையாடப்புக்கவாறே பெண்களுடைய "விடுகாதழகியார்" என்றும், "சொணையழகியார்" என்றும் சொல்லுகிற க்ஷேபவசநம் பொறுக்கமாட்டாமையாலே பின்புகாணும் காதுகுத்தப்புக்கது. காதுபெருக்கிவரப் பற்றுகிறதில்லைகாணும்.

அரு;—முதற்பாட்டு. (காதிலித்யாதி) (க) "காதில்கடிப்பை நோவத்திரிலுனக்கிங்கு இழுக்குற்றென்காதுகள் நொந்திடுகில்லேன்" என்றதைத் திருவுள்ளத்திலே வைத்துக்கொண்டருளுகிறார் (பால்யேத்யாதி). (உ) "கைவில்திரியை இடுகிடாயிந்நின்ற காரிகையார் சிரியாமே" என்ற தாய்வாய்ச்சொல் தன் நெஞ்சுக்கேற அநுபூதமானவாறே காதில்கடிப்பிட ஒருப்பட்டானென்கிறார் (பின்பித்யாதி). ஆனால் (௩) "மகரக்குழைகொண்டு வைத்தேன்" என்றுளே; காதுபெருக்கி * மகரநெடுங் குழைக்காதனுயன்றோவர அடுப்பது. கடிப்பிட்டுவரவேண்டுவானென்னென்ன வருளுகிறார் (அதித்யாதி). கடிப்பிட்டதுக்கே போதுமறித்ததாய் குற்றமாய்விழச்செய்தே, மகரக்குழையிட்டு வருமளவுதாழ்த்தால் முகம்பெறவிரகுண்டோவென்று கருத்து.

(க) பெரி-தி-உ-௩-௧உ. (உ) பெரி-தி-உ-௩-௬. (௩) பெரி-தி-உ-௩-௩.

"காதில்" என்கையாலே வெறும்புறத்திலே பெண்பிறந்தாரை
அநங்யார்ஹைகளாக்கிக் கொள்ளவற்றாயிற்று. அதுக்குமேலே கடிப்
பையுமிட்டானாயிற்று. யுவாக்களாயிருப்பார்க்கு ஆராட்சிதோற்
றச்செய்யும் செயலாயிற்று. (கலிங்கமுடுத்து) நல்லபுடவைகளையும்
உடுக்கமாட்டாதவர்கள் உடுக்கப்புக்கவாறே பொல்லாதாயிருக்கு
மாயிற்று. அங்ஙனன்றிக்கே, உடைவாய்ப்பாலே நெஞ்சுபிணிப்
புண்ணும்படியாகவாயிற்று உடுப்பது. (தாதுநல்ல) பரிமளத்தை
யும் செவ்வியையும் குளிர்த்தியையுமுடைத்தான திருத்துழாய்
மாலையை முடிக்கவல்லன்; முடித்தவாறே கண்ணுக்கு ஆகர்ஷக
மாயிருக்குமிறே.

(போதுமறுத்து) காலத்தைத் தப்பினானாயிற்று, ஒப்பித்துவர
வேண்டுகையாலே. இவர்களுக்குஉடலாக ஒப்பிக்கிறத்தோடு இவர்க
ளோடே ஸம்ஶ்லேஷிக்கிறத்தோடு வாசியென்னென்றாயிற்று அவன்
படி. இருந்தபடியே உகக்கிற எங்களுக்கு ஒப்பிக்கவேணுமோ?
புதியநிலங்களை அழிக்கைக்காகவன்றோ என்றாயிற்று இவர்கள்படி.
கிட்டிவரச்செய்தேயும் காலத்தைத் தப்பிவருகையாலே ஓரடியிலே
பத்தடியிட்டானாயிற்று. (நின்றீர்) ஸாபராதனாகையாலே கிட்டி

---

கடிப்பிட்டுவருவது காதிலன்றோ? மூக்கிலிடுவாருண்டோ? காதிலென்று
விசேஷித்ததுக்குக்கருத்தென்னென்னவருளுகிறார்(காதிலித்யாதி). அவன்
கவும் ஆகர்ஷகமாகக்கடிப்பிட்டுவந்தால், இதுவுமொரு குற்றம்சொல்லுமாபோ
லே சொல்லக்கருத்தென்னென்ன வருளுகிறார் (யுவாக்களித்யாதி). (ஆரா
ட்சி) என்றது-இத்தனைநாளும் காதுகுத்தப்பொறாத இவன் இன்றைக்கா
வேயோ காதுகுத்திக்கடிப்பிட்டானென்று விசாரிக்கையென்கை. பெண்கள்
ஏச காதில் கடிப்பிட்டானென்று நாலுபேரும் சொல்லும்படி நீ இடுகைகுற்ற
மேயன்றோ வென்கிறாளென்று கருத்து. "கலிங்கம்" கறுப்புத்திரிப்பரியட்ட
மாய், இத்தை உடுத்தென்றதுக்கு பா (ஞா) வமேதென்ன வருளுகிறார் (நல்ல
வித்யாதி).

(காலத்தை) வருகிறேனென்று சொன்னகாலத்தை. காலம்தப்பும்படி
ஒப்பிக்கவேணுமோ? ஏற்கவே ஒப்பிக்கலாகாதோ வென்ன வருளுகிறார் (இவர்
களுக்கித்யாதி). ஆனால் அதுவேகுற்றமாக்கி இவர்கள் வெறுப்பானென்னென்
ன்வருளுகிறார் (கிட்டியித்யாதி). ஆனால் நிற்பானென்னென்ன(ஸாபராதனி

வரமாட்டுகிறிலன். ஆற்றாமையாலே புறம்புபோகமாட்டுகிறிலன். (எதுக்கிது) பசியில்கிடையாத சோறென்றிய. (என்னிதுவென்னிதுவென்னோ) ஒப்பித்துக் கொடுவரவேணுமோ?. காலத்தைத் தப்பிவரவேணுமோ? ஸாபராதனானல்மேல் விழவன்றோ வடுப்பது.

மூ;—துவராடையுடுத் தொருசெண்டுசிலுப்பிக்
கவராகமுடித்துக் கலிக்கச்சுக்கட்டிச்
சுவரார்கதவின்புறமே வந்துநின்றீர்
இவராரிதுவென்னிது வென்னிதுவென்னோ. (௨)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| துவர் ஆடை | சிவப்பு நிறப்புடைவை யொன்றை | கலி | வலியையுடைய |
| உடுத்து | திருவரையில் சாத்திக் கொண்டு | கச்சு | கச்சுப்பட்டையை |
| ஒரு செண்டு | ஒரு செண்டையும் | கட்டி | (திருவரையிலே) கட்டிக்கொண்டு, |
| சிலுப்பி | (கையால்) சலிப்பித்துக்கொண்டு(திருக்குழல்களை) | சுவர் ஆர் | சுவரோடிணைந்த |
| கவராக | இரண்டு ப்ரகாரமாக | கதவின்புறமே | கதவின்பக்கமாக வந்து நின்றீர்; |
| முடித்து | முடித்துக்கொண்டு, | இவர் ஆர் | இங்ஙனே வந்து நின்றவர் ஆர் கொல்? |
| | | | இதுவென்! இதுவென்? இதுவென்னோ |

வ்யா:—இரண்டாம்பாட்டு. (துவராடையித்யாதி) முற்படி

யாதி). ஆனல்நடக்கலாகாதோவென்ன வருளுகிறார் (ஆற்றாமையித்யாதி). (என்றிய)-நிமர்த்தம் என்றபடி; உன்உறவுக்கு ப்ரயோஜநமென்னென்றபடி. போது மறுத்துவந்தது-குற்றமானப்போலே, நின்றதும் குற்றமென்று விவக்ஷித்து"என்னோ"என்கிறஸ்வரத்துக் குக்கருத்தருளுகிறார் (ஸாபராதனித்யாதி).

அ௩;—இரண்டாம்பாட்டு. (துவரித்யாதி). கீழ்ப்பாட்டிலே "எதுக்கிதுவென்" என்று ப்ரணயரோஷம் முற்றினபடியைக்கண்டு நின்றநிலையிலே தானேவேறொரு வேஷம்கொண்டுஉள்ளேயுள்ளே ஓடும்படிகடந்து நிற்க,அதிலீடுபட்டு இன்னமென்றறியாதே மயங்கி, பின்னையும் ப்ரணயரோஷத்தாலே சொல்லுகிறாளென்று ஸங்கதி.

"கலிங்கமுடுத்து" என்று சொல்லியிருக்க, "துவராடையுடுத்து" என்னக்கூடுமோ வென்னவருளுகிறார் (முற்படவித்யாதி). (சிவப்புநிறப்புடவை)

உடுத்ததுக்கு ஈடுபடாமையாலே அதுக்குமேலே ஒருசிவப்புநிற
புடவைச் சிமிழ்த்துக்கொண்டு வந்தாளுயிற்று. (ஒருசெண்டுசி
ப்பி) புறம்பே அந்யபரனென்றுதோற்றுகைக்காகக் கையிலே ஒ
செண்டையும் சிலுப்பிக்கொடுவந்தாளுயிற்று. (சுவராகமுடித்து
கிண்ணகத்தில் இழிவாரைப்போலே மயிரைப்புகுந்துமுடித்து ந
க்தி, வலியுடைத்தான கச்சையிட்டுக்கட்டி.

(சுவரார்கதவின்புறமே வந்து) சுவரார்ந்தகதவுக்குப் புறே
வந்து, தள்ளவும் போகாதே நின்றாளுயிற்று. ப்ரத்யபிஜ்ஞார்ஹம
லாதகாலத்திலேவந்தார்இவர், அந்யபரதைபாவித்துவரவேணுமோ
கதவுக்குப்புறம்பே நிற்கவேணுமோ? தள்ளவும் போகாதொழி
வேணுமோ? .... .... .... .... .... .... (வ

மூ;—கருளக்கொடியொன்றுடையீர் தனிப்பாகீர்
உருளச்சகடமதுறக்கில் நிமிர்த்தீர்
மருளைக்கொடுபாடி வந்தில்லம்புகுந்தீர்
இருளத்திதுவென்னிது வென்னிதுவென்னே. (௩

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| ஒன்று | அத்விதீயமான | உறக்கில் | கள்ளநித்திரை கொ கின்ற காலத்தி |
| கருளக்கொடி | கருடத்வஜத்தை | சகடம் அது | அஸுராவிஷ்டயான சகடமானது |
| உடையீர் | நிரூபகமாக உடையவரே! | உருள | உருண்டு துகளாம்ப |
| தனி | (அந்தப் பெரியதிருவடியை)அத்விதீயமாக | நிமிர்த்தீர் | (திருவடியை) நிமிர் |
| பாகீர் | நடத்தவல்லவரே !, | | தருளினவரே ! |

என்றது-சிவப்புச்சாயமேற்றினபுடவை. (சிமிழ்த்துக்கொண்டு) சுற்றிக்கொ
ண்டு. மயிரைப்பேணுகைக்கும் கச்சுக்கட்டுகைக்கும் தாத்பர்யமென்னென்ன
வருளுகிறார் (கிண்ணகத்திலித்யாதி). ப்ரவாஹத்திலிழிவார் மயிரைப்பேண
கச்சுக்கட்டி உத்யுக்தராய்இறங்குமாபோலே, இவன் ஒருபோக (?) ப்ரவா
ஹத்திலிழிகைக்கு ஒருப்பாடு தோற்றி நின்றானென்கை.

(தள்ளவும்) என்றது - கதவைத்தள்ளவு மென்றபடி. அவனைத்தொட்
டவளாகில் தள்ளமாட்டாளிறே. கீழே "வந்துநின்றீர்" என்றுவைத்து "இவ
ரார்" என்கைகூடுமோவென்னவருளுகிறார் (ப்ரத்யபிஜ்ஞேத்யாதி). அன்
க்கே, ஸந்தேஹிக்கிறாளென்று விவக்ஷித்தருளுகிறார் (ப்ரத்யபிஜ்ஞேத்யாதி)
(கதவுக்குப் புறம்பே) என்றது-சுவரோடே சேர்ந்தகதவுக்கும் வாசற்படிக்கு
நடுவே என்கை. ... ... ... ... ... ... ... (உ

| | | | |
|---|---|---|---|
| ிருளத்து | இராக்காலத்திலே | இல்லம் | அகத்துக்குள்ளே |
| ருளே | (பெண்பிறந்தாரை) ம யக்கவல்லபாட்டை | புகுந்தீர் | ப்ரவேசித்தீரே!; |
| ாடிக்கொடு வந்து | (மெள்ளப்) பாடிக்கொண்டு வந்து | இதுவென்? இதுவென்? இதுவென்னே? | (௪) |

வ்யா;—மூன்றாம்பாட்டு (கருளக்கொடி) ஜகத்ப்ரஸித்தராயிரு பார் அப்ரஸித்தரைப்போலே வரக்கடவதோ?. (தனிப்பாகீர்) எல் ார் பக்கலிலும் பண்ணும் ரக்ஷணமடைய அவனொருவனுக்குமே ண்ணவேண்டும்படியன்றோ உமக்கிருக்கிறது. (உருளச்சகடம்) திஸாஹஸங்களையன்றோ நீர்செய்வது. அஸுராவேசத்தாலே ன்ற சகடம் முலைவரவு தாழ்த்தவாறே சிறி நிமிர்த்ததிருவடிக க்கு இலக்காய்த்துகளாய்ப் போயிற்று.

(மருளே) பெண்பிறந்தாரடைய நஞ்சுண்டாரைப்போலே மோ க்கும்படியாகப் பண்ணை நனுங்கிக்கொண்டுவந்து ராத்ரியிலே, ஸித்தராயிருப்பார் அப்ரஸித்தரைப்போலே வரக்கடவதோ?; ண்ணை நனுங்கிக்கொடுவரக்கடவதோ?;ராத்ரியிலேவரக்கடவதோ?.

மூ;—நாமம்பலவுமுடை நாரணநம்பீ
தாமத்துளவம் மிக நாறிடுகின்றீர்
காமனெனப்பாடிவந் தில்லம்புகுந்தீர்
ஏமத்திதுவென்னிது வென்னிதுவென்னே. (௪)

---

அந;—மூன்றாம்பாட்டு. (கருளவித்யாதி) கீழ்ப்பாட்டில் வாசல்படிக் ளே அடியிட்டவளவிலே தயிர் கடையமாட்டாதேயிருக்கக்கண்டு கண் கு இருண்டவாறே உள்ளேபுக, அத்தைக்கண்டு அவள் "கள்ளனைப் லே வருகை-கொடிகட்டிக்கொண்டிருக்கிற உமக்கு உசிதமோ" என்கிறு ன்று ஸங்கதி.

"கருளத்தனிப்பாகீர்" என்றந்வயித்து அவ்வருகுமேற்கொள்ளுகை ரக்ஷ மன்று தாத்பர்யமென்றருளுகிறார் (எல்லாரித்யாதி). நான் உங்கள் வீட் அடியிட்டுவா, என்னை கருளப்பாகனைச் சொல்லுகிறதென்னென்னும் நத்திலே "உருளவித்யாதி" என்றுவிவக்ஷித்தருளுகிறார் (அதிஸாஹஸே தி. அதாவது - திருவடிமேலே வருதி; நீர்அடியிட்டுவருகை ஸாஹஸம். உனக்கு அடியே பிடித்து உண்டென்று கருத்தென்கை.

"மருளே,மருளப்பண்ணும்பாட்டை-பாடிக்கொண்டு" என்றந்வயித்து அர் ருளுகிறார் (பண்ணித்யாதி). (நனுங்குகை) மெள்ளப்பாடுகை. ... (௩)

| பதம். | உரை. | பதம். | உரை. |
|---|---|---|---|
| நாமம்பலவும்உடை | ஸஹஸ்ர நாமங்களையுடைய | ஏமத்து | இராக்காலத்திலே |
| நாரண நம்பீ | ஒன்றுலும் குறைவில்லாத ஸ்ரீமந்நாராயணனே!, | காமன் என | "மந்மதனேஇவன்"ன்னும்படியாக |
| துளவத்தாமம் | திருத்துழாய் மாலையாலே | பாடி | பாட்டைப்பாடிக்கொண்டு |
| மிக | மூக்கறும்படி [லே | வந்து | (அரணையழித்து)வந்து |
| நாறிடுகின்றீர் | வாஸித்துப்போராநின்றீர்; | இல்லம் | அகத்துக்குள்ளே |
| | | புகுந்தீர் | ப்ரவேசித்திரே!; |
| | | இதுஎன்? இதுஎன்? இதுஎன்னே?. | |

வ்யா;—நாலாம்பாட்டு. (நாமம்பலவுமுடை நாரணநம்பீ "இன்னானுக்குசேஷபூதன், இன்னானுக்கு சேஷபூதன்" என்று படைத்தபேருக்கு எல்லையுண்டோ? சொல்லவேணுமோ? நீர் உ பொது வல்லீரோ? நீர்நிரபேக்ஷரல்லீரோ?. (தாமமித்யாதி) கல வருவார் மாளிகைச்சாந்து நாற்றத்தோடேயோ வருவது.

(காமனெனப்பாடிவந்து) காமன் பாட்டாலே பெண்க

---

அந;—நாலாம்பாட்டு. (நாமமித்யாதி) கீழ்ப்பாட்டிலே மருளைக் கொ பாடினபடியைச்சொல்லுகிறவிடத்தில், "பெண்பிறந்தாரை யெல்லாம் பி ற்றுமவன்"என்று சொல்லக்கேட்டு "நான் உன்னையல்லதுவேறு அறிவே என்று நின்றுகொண்டு பெருந்தானத்திலே பாடத் துடங்கினான். அதி ஈடுபட்டு மாமிமார் முதலானாரறிய இப்படி பாடுவாருண்டோ என்று அது குற்றமாக்கிச் சொல்லுகிறாளென்று ஸங்கதி.

நாராயணபதத்துக்கு பஹுவ்ரீஹி ஸமாஸபலித ஸௌலப்யத் பற்ற ஒரு தாத்பர்யமருளிச்செய்து, தத்புருஷ ஸமாஸபலித பாத்வத் பற்ற வருளுகிறார் (நீர்நிரபேக்ஷரல்லீரோ) என்று. "மிக" என்கையாலே வத்துக்குள்ள பரிமளமேயன்றிக்கே, பெண்களுடைய கொங்கைத்தலத் கோயில் சாந்து நாறுநின்றதென்று சொன்னமை தோற்றுகையாலே அ கிறார் (கலக்கவித்யாதி). இங்கே கலக்கவரும் போது இட்டமாலை சருகா ரே இருக்கவேண்டுவது என்று கருத்து.

இப்படி அவள் "குறிகள் காணத்துடங்கினாள்"என்று மிகவும் மருளே வேணுமென்று பாடத்துடங்க, அதுதானும்அகத்தார் அறியில் குற்றமா று அதுக்கு வெறுக்கிறாளென்று தாத்பர்யமருளுகிறார் (காமனித்யாதி).

